## ॥ कल्याणवृष्टिस्तवः ॥

## கல்யாண வ்ருஷ்டிஸ்தவம் ॥

(1)

कल्याणवृष्टिभिरिवामृतपूरिताभि –
लक्ष्मीस्वयंवरणमङ्गलदीपिकाभिः ।
सेवाभिरम्ब तव पादसरोजमूले
नाकारि किं मनसि भाग्यवतां जनानाम् ॥

கல்யாண வ்ருஷ்டிபிரிவாம்ருத பூரிதாபி:
லக்ஷ்மீ ஸ்வயம்வரண மங்கல தீபிகாபி: ।
ஸேவாபிரம்ப தவ பாதஸரோஜமூலே
நாகாரி கிம் மனஸி பாக்யவதாம் ஜநாநாம் ॥

பேரதிர்ஷ்டம் வாய்ந்த மக்களின் மனதில், ஹே தாயே! உன் திருவடித் தாமரையில், அம்ருதம் நிரம்பிய கல்யாண மழை போலிருப்பவையும், செல்வச் செழிப்பை வரவழைக்கும் மங்கல ஆரதி போன்றிருப்பவையும் ஆன சேவைகள் செய்ய எண்ணமிடப்படவில்லையா?

(2)

एतावदेव जननि स्पृहणीयमास्ते
त्वद्वन्दनेषु सलिलस्थगिते च नेत्रे ।
सान्निध्यमुद्यदरुणायुतसोदरस्य
त्वद्विग्रहस्य परया सुधया प्लुतस्य ॥

ஏதாவதேவ ஜநநி ஸ்ப்ருஹணீயமாஸ்தே
த்வத்வந்தநேஷு ஸலில ஸ்தகிதே ச நேத்ரே ।
ஸாந்நித்ய முத்யதருணாயுத ஸோதரஸ்ய
த்வத்விக்ரஹஸ்ய பரயா ஸுதயா ப்லுதஸ்ய ॥

ஹே தாயே! உன்னைக் கண்ணாரக் கண்டு வந்தனம் செய்யும்பொழுது இதொன்றுதானே மிகவும் விரும்பத்தக்கதாயுள்ளது! என்னவெனில், உதிக்கும் ஆயிரமாயிரம் அருணர்கள் போலிருப்பதும், மேலான அம்ருதம் சொட்டச் சொட்ட இருப்பதுமான உனது திருமேனி காட்சியும், பேரானந்தப் பெருக்கால் நிரம்பி சற்று தடைபடுவதான எனது கண்களும் இருந்து விடட்டுமே!

(3)

ईशत्वनामकलुषाः कति वा न सन्ति
ब्रह्मादयः प्रतिभवं प्रलयाभिभूताः।
एकः स एव जननि स्थिरसिद्धिरास्ते
यः पादयोस्तव सकृत्प्रणतिं करोति ॥

ஈசத்வ நாமகலுஷா: கதிவா நஸந்தி
ப்ரஹ்மாதய: ப்ரதிபவம் ப்ரலயாபிபூதா: ।
ஏக: ஸஏவ ஜநநி ஸ்திரஸித்திராஸ்தே
ய:பாதயோஸ்தவ ஸக்ருத்ப்ரணதிம் கரோதி ॥

ஹே தாயே! ப்ரம்மன் முதலிய தேவர்கள் ஒவ்வொரு யுகமும் பிரலயம் தாக்கி, 'ஈசன்' - என்ற பெயர் மட்டில் குழப்பம் கொண்டுள்ளவர் எத்தனை பேர் உள்ளனர். ஆனால், ஹே அம்மே! உனது திருவடியில் ஒருமுறை வணக்கம் செலுத்தியதும் ஒருபோதும் அழியாத நிலையான சித்தியுடன் விளங்கும் எவரேனும் ஒருவர்தானே!.

(4)

लब्ध्वा सकृत्त्रिपुरसुन्दरि तावकीनं
कारुण्यकन्दलितकान्तिभरं कटाक्षम्।
कन्दर्पकोटिसुभगास्त्वयि भक्तिभाजः
सम्मोहयन्ति तरुणीर्भुवनत्रयेऽपि ॥

லப்த்வா ஸக்ருத் த்ரிபுரஸுந்தரி தாவகீநம்
காருண்யகந்தலித காந்திபரம் கடாக்ஷம் ।
கந்தர்பகோடி ஸுபகாஸ்த்வயி பக்தி பாஜ:
ஸம்மோஹயந்தி தருணீர்புவனத்ரயேऽபி ॥

ஹே த்ரிபுரஸுந்தரி! கருணை ததும்பும் உனது அழகான கடாக்ஷத்தை ஒருமுறை பெற்று விட்ட பொழுதே உன்னிடம் பக்தி கொண்டவர் கோடி மன்மதர்கள் போல அழகிய தோற்றத்துடன் மூவுலகிலும் இளநங்கை யரை மயக்குமுறச் செய்வரே!

(5)

ह्रीं कारमेव तव नाम गृणन्ति वेदा
मातस्त्रिकोणनिलये त्रिपुरे त्रिनेत्रे ।
त्वत्संस्मृतौ यमभटाभिभवं विहाय
दीव्यन्ति नन्दनवने सहलोकपालैः ॥

ஹ்ரீங்காரமேவ தவ நாம க்ருணந்தி வேதா
மாதஸ்த்ரிகோண நிலயே த்ரிபுரே த்ரிநேத்ரே ।
த்வத்ஸம்ஸ்ம்ருதௌ யமபடாபிபவம் விஹாய
தீவ்யந்தி நந்தனவநே ஸஹலோகபாலை: ॥

வேதங்கள், உனது பெயராக சொல்லியுள்ளதெல்லாம் ஹ்ரீம்' என்று மட்டும்தான்! ஹே த்ரிபுரே, ஹே த்ரிநேத்ரே! தாயே த்ரிகோணத்திலுறைபவளே! உன்னை நினைக்குங்கால் யம தூதர்களின் தாக்குதலை விட்டொழித்து தேவலோகப்பூங்காவில் திக்பாலகருடன் உனது பக்தர்கள் களித்து மகிழ்வரே!

(6)

हन्तः पुरामधिगलं परिपीयमानः
क्रूरः कथं न भविता गरलस्य वेगः ।
नाश्वासनाय यदि मातरिदं तवार्धं
देहस्य शश्वदमृताप्लुतशीतलस्य ॥

ஹந்து: புரா மதிகலம் பரிபீயமாந:
க்ரூர: கதம் ந பவிதா கரலஸ்ய வேக: ।
நாச்வாஸநாய யதி மாத ரிதம் தவார்தம்
தேஹஸ்ய சச்வதம்ருதாப்லுதசீதலஸ்ய ॥

ஓ தாயே! அம்ருதத்தில் தோய்ந்து நனைந்ததால் குளிர்ச்சி பெற்ற இந்த உனது பகுதி தேகம் சற்று தணிப்பதற்கில்லாமல் இருந்தால் முப்புரங்களை எரித்தவராயினும் உனது பர்தாவின் கழுத்து பக்கம் (குடித்து) இறங்கிய விஷத்தின் க்ரூரத்தன்மை வெகுவாக இருந்திருக்குமல்லவா?

(7)

सर्वज्ञतां सदसि वाक्पटुतां प्रसूते
देवि त्वदङ्घ्रिसरसीरुहयोः प्रणामः।
किं च स्फुरन्मकुटमुज्ज्वलमातपत्रं
द्वे चामरे च महतीं वसुधां ददाति ॥

ஸர்வஜ்ஞதாம் ஸதஸி வாக்படுதாம் ப்ரஸூதே
தேவி த்வதங்க்ரிஸரஸீருஹயோ: ப்ரணாம:।
கிம்ச ஸ்புரன்மகுட முஜ்வல மாதபத்ரம்
த்வே சாமரே ச மஹதீம் வஸுதாம்ததாதி ॥

ஹே தேவி! உனது திருவடித் தாமரைகளில் விழுந்து நமஸ்கரிப்பது, மனிதனுக்கு பேரறிவையும், பேச்சு வன்மையையும் தோற்றுவிக்கிறது. மேலும், பூமியாளுமையையும், பளபளக்கும் கிரீடத்தையும், வெண்பட்டுக் குடை, இரு சாமரங்கள் ஆகியவற்றையுமல்லவா கொடுத்து விடுகிறது!

(8)

कल्पद्रुमैरभिमतप्रतिपादनेषु
कारुण्यवारिधिभिरम्ब भवत्कटाक्षैः।
आलोकय त्रिपुरसुन्दरि मामनाथं
त्वय्येव भक्तिभरितं त्वयि बद्धतृष्णम् ॥

கல்பத்ருமை ரபிமதப்ரதிபாதநேஷு
காருண்ய வாரிதிபிரம்ப பவத்கடாக்ஷை:।
ஆலோகய த்ரிபுரஸுந்தரி மாமநாதம்
த்வய்யேவ பக்தி பரிதம் த்வயிபத்த த்ருஷ்ணம் ॥

ஹே த்ரிபுர ஸுந்தரி! தாயே! வேண்டியதை கொடுப்பதில் கல்பக மரங்களாயும், கருணைக் கடலாயும் உள்ள உனது கடைக்கண்களால் அநாதனாகிய என்னை கடாக்ஷித்தருள்வாயாக! நான் உன்னிடம் பக்தி செலுத்துகிறேனே! உன்னிடம் ஆழ்ந்த நாட்டமும் கொண்டுள்ளேனே!

(9)

हन्तेतरेष्वपि मनांसि निधाय चान्ये
भक्तिं वहन्ति किल पामरदैवतेषु ।
त्वामेव देवि मनसा समनुस्मरामि
त्वामेव नौमि शरणं जननि त्वमेव ॥

ஹந்தேதரேஷ்வபி மநாம்ஸி நிதாய சாந்யே
பக்திம் வஹந்தி கில பாமர தைவதேஷு ।
த்வாமேவ தேவி மநஸா ஸமனுஸ்மராமி
த்வாமேவ நௌமி சரணம் ஜநநி த்வமேவ ॥

ஹே தேவி! தாயே! சிலர் வேறு தேவதைகளின்பால் மனம் வைத்து பக்தி கொள்கின்றனர்; வேறு சிலரோ பாமர தெய்வங்களின்பால் கூட பக்தி வைக்கிறார்கள். என்னபேதமை! நானோ உன்னையன்றி மனதால் வேறெவரையும் மனதால் கூட எண்ணுவதில்லை. உன்னையே நமஸ்கரிக்கிறேன். நீயே தான் எனக்கு புகலிடம்!

(10)

लक्ष्येषु सत्स्वपि कटाक्षनिरीक्षणाना –
मालोकय त्रिपुरसुन्दरि मां कदाचित् ।
नूनं मया तु सदृशः करुणैकपात्रं
जातो जनिष्यति जनो न च जायते च ॥

லக்ஷ்யேஷு ஸத்ஸ்வபி கடாக்ஷ நிரீக்ஷணாநாம்
ஆலோகய த்ரிபுரஸுந்தரி மாம் கதாசித் ।
நூனம் மயா து ஸத்ருச: கருணைகபாத்ரம்
ஜாதோ ஜநிஷ்யதி ஜநோ ந ச ஜாயதே ச ॥

ஹே த்ரிபுர ஸுந்தரி! உனது கடாக்ஷங்கள் பதிவதற்கு வேறு பல இலக்குகள் இருக்கத்தான் செய்கின்றன. ஆயினும் என்னை எப்பொழுதாவது கடைக்கண்ணால் கடாக்ஷித்து விடு. நிச்சயமாகச் சொல்வேன் என்னையொத்த ஒருவன் உனது கருணைக்கு உகந்த பாத்ரமாக பிறந்ததுமில்லை, பிறக்கப் போவதுமில்லை. ஏன்! இப்பொழுதும் இல்லை.

**(11)**

ह्रीं ह्रीमिति प्रतिदिनं जपतां तवाख्यां
किं नाम दुर्लभमिह त्रिपुराधिवासे ।
मालाकिरीटमदवारणमाननीया
तान्सेवते वसुमती स्वयमेव लक्ष्मीः ॥

ஹ்ரீம் ஹ்ரீமிதி ப்ரதிதினம் ஜபதாம் தவாக்யாம்
கிம்நாம துர்லபமிஹ த்ரிபுராதிவாஸே ।
மாலாகிரீட மதவாரணமாநநீயா
தான் ஸேவதே வஸுமதீ ஸ்வயமேவ லக்ஷ்மீ: ॥

'ஹ்ரீம் ஹ்ரீம்' - என்ற உனது திருநாமத்தை தினமும் ஜபம் செய்து வருபவருக்கு, ஹே த்ரிபுர ஸுந்தரி! கிடைப்பதற்கரிதாகியுள்ளது எது? ஏன்? மாலை, கிரீடம், மத யானைகளுடன் லக்ஷ்மிதேவி தானே வந்து அவர்களை சேவிப்பாளே!

**(12)**

सम्पत्कराणि सकलेन्द्रियनन्दनानि
साम्राज्यदाननिरतानि सरोरुहाक्षि ।
त्वद्वन्दनानि दुरिताहरणोद्यतानि
मामेव मातरनिशं कलयन्तु नान्यम् ॥

ஸம்பத் கராணி ஸகலேந்திரியநந்தநாநி
ஸாம்ராஜ்யதான நிரதானி ஸரோருஹாக்ஷி
த்வத் வந்தநாநி துரிதாஹரணோத்யதாநி
மாமேவ மாதரநிசம் கலயந்து நான்யம் ॥

ஹே தாமரையிதழ் கன்னியே! செல்வங்களையளிப்பதும், எல்லாப் புலன்களையும் மகிழ்விப்பதும், பேராளுமையையே நல்குபவையும், அனைத்துப் பாவங்களையும் அழிப்பவையுமான இந்த உன்னைக் குறித்துச் செய்யும் நமஸ்காரங்கள் என்னையே சார்ந்து நிலவட்டும்!

(13)

कल्पोपसंहृतिषु कल्पितताण्डवस्य
देवस्य खण्डपरशोः परभैरवस्य ।
पाशाङ्कुशैक्षवशरासनपुष्पबाणा
सा साक्षिणी विजयते तव मूर्तिरेका ॥

கல்போபஸம் ஹ்ருதிஷு கல்பித தாண்டவஸ்ய
தேவஸ்ய கண்டபரசோ: பரபைரவஸ்ய ।
பாசாங்குசை க்ஷவசராஸன புஷ்ப பாணா
ஸா ஸாக்ஷிணீ விஜயதே தவ மூர்திரேகா ॥

ஹே தாயே! கல்ப காலம் முடியும் தருணத்தில் தாண்டவம் புரியும் பைரவஸ்ரூபியான, துண்டு மழுவை கையில் ஏந்தியவரான பரமேச்வரனது ஒரு பாகமாய் அமைந்ததும், பாசம், அங்குசம், கரும்பு வில், புஷ்ப பாணம் இவற்றை கொண்டதாயுமுள்ள உனது மூர்த்திதான் ஸாக்ஷியாக உள்ளது.

(14)

लग्नं सदा भवतु मातरिदं तवार्धं
तेजःपरं बहुलकुङ्कुमपङ्कशोणम् ।
भास्वत्किरीटममृतांशुकलावतंसं
मध्ये त्रिकोणनिलयं परमामृतार्द्रम् ॥

லக்னம் ஸதாபவது மாதரிதம் தவார்தம்
தேஜ: பரம் பகுலகுங்கும பங்க சோணம் ।
பாஸ்வத் கிரீடம ம்ருதாம்சு கலாவதம்ஸம்
மத்யே த்ரிகோண நிலயம் பரமாம்ருதார்த்ரம் ॥

ஹே தாயே! மிக்க தேஜஸ் பொருந்தியதும், மிகுந்த குங்குமப்பூச்சினால் சிவந்ததுள்ளதும், கிரீடமணிந்தும், பிறைச் சந்திரனை அணிந்தும் விளங்குவதும், நடுவில் முக்கோண இருப்பிடம் கொண்டு, அம்ருதப்பெருக்கால் நனைந்துமுள்ள உனது பகுதி உடல் என் மனதில் ஆழ்ந்து பதியட்டும்!

### (15)

ह्रींकारमेव तव नाम तदेव रूपं
त्वन्नाम दुर्लभमिह त्रिपुरे गृणन्ति।
त्वत्तेजसा परिणतं वियदादिभूतं
सौख्यं तनोति सरसीरुहसम्भवादेः॥

ஹ்ரீங்காரமேவ தவ நாம ததேவரூபம்
த்வந்நாம துர்லப மிஹ த்ரிபுரே க்ருணந்தி।
த்வத்தேஜஸா பரிணதம் வியதாதி பூதம்
ஸௌக்யம் தநோதி ஸரஸீருஹ ஸம்பவாதே:॥

ஹே த்ரிபுரஸுந்தரி! ஹ்ரீம்' என்பதே உனது பெயரும் வடிவமும் கூட. ஆனால் அது மிக ரஹஸ்யமாக உள்ளதெனக் கூறுகின்றனர். உனது தேஜஸ் பரவியுள்ள பஞ்சபூதங்களே பிரம்ம தேவன் முதலியோருக்கு மகிழ்ச்சியளிக்கின்றன.

### (16)

ह्रींकारत्रयसम्पुटेन महता मन्त्रेण सन्दीपितं
स्तोत्रं यः प्रतिवासरं तव पुरो मातर्जपेन्मन्त्रवित्।
तस्य क्षोणिभुजो भवन्ति वशगा लक्ष्मीश्चिरस्थायिनी
वाणी निर्मलसूक्तिभारभरिता जागर्ति दीर्घं वयः॥

ஹ்ரீங்காரத்ரயஸம்புடேந மஹதா மந்த்ரேண ஸந்தீபிதம்
ஸ்தோத்ரம் ய: ப்ரதிவாஸரம் தவ புரோ மாதர்ஜபேத்
மந்த்ரவித்।
தஸ்ய க்ஷோணி புஜோ பவந்திவசகா லக்ஷ்மீ: சிரஸ்தாயிநீ
வாணீ நிர்மலஸூக்திபார பரிதா ஜாகர்தி தீர்கம்வய:॥

ஹே தாயே! மூன்று ஹ்ரீம்' காரங்களடங்கிய மஹா மந்த்ரம் துலங்கும் இந்த ஸ்தோத்ரத்தை தினமும் உனது எதிரில் ஜபிப்பவருக்கு அரசர்களும் தோழமை கொள்வர்; எல்லா செல்வங்களும் நிலைபெற்றிருக்கும்; தூய நல்லுரை பொதிந்த பேச்சாற்றல் கைகூடும். நீண்ட ஆயுளும் சித்திக்கும்.

கல்யாண வ்ருஷ்டிஸ்தவம் முற்றிற்று